கல்வி இலாக்கா அதிகாரிகளால் 1948-ல் விதிக்கப்பட்ட
பாட திட்டப்படி வெளியிடப்பட்டுள்ளது.






இளைஞர்

# திருக்குறள்

இரண்டாம் பகுதி
**60.**



கம்பெனி, கும்பகோணம்.
1948.

# இளைஞர்

# திருக்குறள் - அறுபது

## இரண்டாம் பாரம் (ஏழாம் வகுப்பு)




[அரசினர் 1948-ஆம் வருஷத்திய பாடத் திட்டத்திற்கமைய வெளியிடப்பட்டுள்ளது.]




பதிப்பாளர்:

P. V. நாதன் & Co.,

கும்பகோணம்.




[விலை அணா 4

# முகவுரை

'திருக்குறள்' என்பது செந்தமிழ் நூல்களுள் மேன்மை பெற்று விளங்குவது. இந்நூலை உண்மைப் பெரியார் அனைவரும் போற்றிப் பாராட்டியுள்ளார்.

இந் நூல் மக்களுக்கு உறுதி தருபவைகளைச் செவ்வனே எடுத்துக் கூறுவது. 'திரு' என்பது மேன்மை; 'குறள்' என்பது இரண்டடியாலாகிய வெண்பா. ஆகவே மேன்மையுடைய குறள் வெண்பாக்களாலாகிய நூல் என்பது பொருள்.

இந் நூலை இயற்றியவர் திருவள்ளுவர். இவர் 1800 ஆண்டுகளுக்கு முன் இருந்தவர் என்பர். இவர் மயிலாப்பூரில் இருந்தாரென்று சிலரும், மதுரையில் இருந்தார் என்று சிலரும் எழுதியிருக்கின்றனர்.

அண்மையில் விளங்கிய பாரதியாரும், "வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து வான்புகழ் கொண்ட தமிழ் நாடு" என வள்ளுவரது அரும் பெருஞ் சிறப்பையும் அவர் தோன்றிய தமிழ் நாட்டின் பெருமையையும் இனிமை மிகப் பாடியிருக்கிறார்.

திருக்குறள் 1330 குறள் வெண்பாக்களையுடையது. அவற்றுள் ஓர் (60) அறுபது பாக்கள் இரண்டாவது பாரத்திற்கும் (ஏழாம் வகுப்புக்கும்) கற்பிக்கப்பட வேண்டியவைகளாக அரசியலார் தேர்ந்தெடுத்து, அவற்றை ஆசிரியர் கற்பிக்கவேண்டுமென்று கட்டளையிட்டுள்ளனர்.

அந்த அறுபது பாக்களும் பதவுரை கருத்துரைகளுடன் இந் நூலிலே வெளியிடப் பட்டுள்ளன.

பிரசுரகர்த்தர்கள்.



# திருக் குறள்.

## (இரண்டாம் பகுதி)

### முதற் கடவுளை நினைத்தலின் பயன்

**தனக்குவமை யில்லாதான் தாள்சேர்ந்தார்க்கு அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது** 1

பதவுரை: தனக்கு உவமை இல்லாதான் தாள் - தனக்கு நிகரில்லாத கடவுளது திருவடியை, சேர்ந்தார்க்கு அல்லால் - அடைந்தவர்க்கு அல்லது, மனக்கவலை மாற்றல் அரிது - மனக் கவலைகளை நீக்க முடியாது.

கடவுளை இடை விடாது நினைத்துக் கொண்டு இருப்பவர்க்கு மனக் கவலை உண்டாகாது.

சேர்ந்தார் - இடைவிடாது நினைத்துக் கொண்டிருப்பவர்.

### அறஞ்செய்வார் பெறும் பயன்

**அறத்தான் வருவதே யின்பமற் றெல்லாம்
புறத்த புகழும் இல** 2

பத: அறத்தான் வருவதே இன்பம் - (இல்) அறத்தினுல் பெறுவது தான் இன்பம்; மற்ற எல்லாம் புறத்த - அவ்வறமல்லாத மற்றவை யெல்லாம் துன்பந் தருவனவாம்; புகழும் இல - (அதுவு மன்றிப்) புகழும் உடையவை யல்ல.

அறம் செய்பவர் இம்மை யின்பமும் புகழும் அடைவர்.

## தாயின் மகிழ்ச்சி

**ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன்மகனைச்**
**சான்றோன் எனக்கேட்ட தாய் 3**

பத: தன்மகனை - தன் புதல்வனை, சான்றோன் எனக் கேட்ட - கல்வி கேள்விகளால் நிறைந்தவனென்று (அறிவுடையோர் சொல்லக்) கேட்ட, தாய் - தாய், ஈன்ற பொழுதில் - (தான் அவனைப்) பெற்ற காலத்திலும், பெரிது உவக்கும் - மிகுதியாக மகிழ்வள்.

தன் மகன் கல்வி கேள்விகளால் நிறைந்திருப்பது தாய்க்கு மிக்க மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

## அன்பில்லாவிடத்து உளதாகும் குற்றம்

**அன்பின் வழியது உயிர்நிலை; அஃதிலார்க்(கு)**
**என்புதோல் போர்த்த உடம்பு. 4**

பத: உயிர் நிலை - உயிர் நின்ற உடம்பாவது, அன்பின் வழியது - அன்பு வழிநின்ற உடம்பே; அஃது இலார்க்கு உடம்பு - அவ்வன்பு இல்லாதவர்க்கு (உண்டான) உடம்புகள், என்பு தோல் போர்த்த - எலும்பைத் தோலால் மூடியவைகளே ஆகும்.

அன்பு உள்ளவரே உடம்பினாற் பெறும் பயனை அடைபவராவர்.

## அன்பின் உண்மை

**அன்பிற்கும் உண்டோ அடைக்குந்தாழ் ஆர்வலர்**
**புன்கணீர் பூசல் தரும். 5**

பத: அன்பிற்கும் அடைக்குந்தாழ் உண்டோ? - அன்பைப் பிறர் அறியாமல் அடைத்து வைக்கும் தாழும் இருக்கிறதோ? ஆர்வலர் - அன்புடையாரது, புன் கண்ணீர் - (தம்மால் அன்பு செய்யப் பட்டவரது துன்பங் கண்டபொழுது சொரிகின்ற) துன்பக் கண்ணீரே, பூசல் தரும்- (அவர்களது உள்ளன்பை எல்லாரும்) அறியச் செய்யும்.

அன்புடையவர் தம்மால் அன்பு செய்யப்பட்டவரது துன்பங்கண்ட பொழுது இரங்குவர்.

## விருந்தோம்புவாரது இம்மைப் பயன்

அகனமர்ந்து செய்யாள் உறையும் முகனமர்ந்து
நல் விருந்(து) ஓம்புவான் இல். 6

பத: முகம் அமர்ந்து - இனிமை பொருந்திய முகத்தை உடையவனாய், நல் விருந்து - தக்க விருந்தினரை, ஓம்புவான் இல் - காப்பாற்றுபவனது வீட்டின்கண், செய்யாள் - திருமகள், அகன் அமர்ந்து - மனம் மகிழ்ந்து, உறையும் - வாழ்வாள்.

விருந்தினரைக்காப்பாற்றுபவன் பெரும் செல்வனாய் விளங்கிக் கொண்டிருப்பான்.

## இனியவை கூறுவாரின் இம்மைப் பயன்

பணிவுடையன் இன்சொலன் ஆதல் ஒருவர்க்(கு)
அணியல்ல மற்றுப் பிற 7

பத: ஒருவர்க்கு - ஒருவனுக்கு, அணி - அணியாவது, பணிவு உடையன் இன்சொலன் ஆதல் - (தன்னால் தாழப் படுவார்கண்) தாழ்ச்சியுடையனாய் (எல்லாரிடத்தும்) இனிய சொல்லையும் உடையவனாய் இருத்தல்; பிற அல்ல - (இவை யிரண்டு மன்றி உடம்பிலணியும்) பிற அணிகள் அணிகளாக மாட்டா.

வணக்க முடைமையும் இன் சொற்கள் கூறலும் சிறந்த அழகைத் தருவனவாம்.

## காலத்திற் செய்த நன்றியின் பெருமை

காலத்தினால் செய்த நன்றி சிறி(து)எனினும்
ஞாலத்தின் மாணப் பெரிது. 8

பத: காலத்தினால் செய்த நன்றி - (ஒருவனுக்கு முடிவு வந்த) காலத்தில் (ஒருவன்) செய்த உபகாரம், சிறிது எனினும் - சிறியதாயிருப்பினும், ஞாலத்தின்

மாணப் பெரிது — (அஃது) உலகத்தினும் மிகப் பெரிதாகும்.

ஒருவனுக்கு அவன் பெருந் துன்பமுற்ற காலத்தில் செய்த உதவி மிக உயர்ந்ததாகும்.

## வாணிகரது வாணிபம்

**வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்**
**பிறவும் தமபோல் செயின்.** 9

பத: பிறவும் தமபோல் பேணிச் செயின் - பிறர் பொருளையும் தம் பொருள்போலப் பாதுகாத்துச் செய்தால் - வாணிகம் செய்வார்க்கு வாணிகம் - (அச் செய்கையானது) வாணிகம் செய்வார்க்கு (நல்ல) ஊதியமாம்.

வாணிகர் பிறர்பொருளைத் தம் பொருள்போல் காத்தல் அவர்களுக்கு அறமாகும்.

## அடக்கத்தின் சிறப்பு

**எல்லார்க்கும் நன்றாம் பணிதல்; அவருள்ளும்**
**செல்வர்க்கே செல்வம் தகைத்து.** 10

பத: பணிதல் எல்லார்க்கும் நன்றாம் - அடங்குதல் எல்லாருக்கும் நன்மையைத் தருவதாம்; அவருள்ளும் செல்வர்க்கே செல்வம் தகைத்து - அவர்களுள்ளும் செல்வர்களுக்கே (அவ்வடக்கம் மற்றொரு) செல்வமாய்த் தோன்றும் சிறப்பினையுடையது.

செல்வர்களுக்கு அடக்கமுடைமை பிறிதொரு சிறந்த செல்வமாகும்.

## ஒழுக்கமுள்ள விடத்துக் குணமும் இல்லாத விடத்துக் குற்றமும்

**ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்**
**இழிந்த பிறப்பாய் விடும்.** 11

பத: ஒழுக்கம் உடைமை குடிமை - (எல்லார்க்கும்) ஒழுக்க முடைமை குலனுடைமையாகும்; இழுக்கம்

இழிந்த பிறப்பாய் விடும் - (அந்த ஒழுக்கத்தில்) தவறுதல் இழிவான பிறப்பாய்விடும்.

எல்லாரும் அவரவர்களுடைய ஒழுக்கத்தில் தவறுதல் கூடாது.

## இதுவுமது

ஒழுக்கத்தின் எய்துவர் மேன்மை; இழுக்கத்தின்
எய்துவர் எய்தாப் பழி. 12

பத: ஒழுக்கத்தின் மேன்மை எய்துவர் - (எல்லாரும் நல்ல (ஒழுக்கத்தினால் உயர்ச்சி அடைவர்; இழுக்கத்தின் எய்தாப் பழி எய்துவர் - தீய ஒழுக்கத்தினால் (தமக்கு) அடாத பழியினை அடைவர்.

நல்லொழுக்கம் எப்பொழுதும் மேன்மையைக் கொடுக்கும்; தீ யொழுக்கம் பெரும் பழியினைக் கொடுக்கும்.

## பிறர் செய்வன பொறுத்தலின் பயன்

ஒறுத்தார்க்(கு) ஒருநாளை இன்பம்; பொறுத்தார்க்குப்
பொன்றும் துணையும் புகழ். 13

பத: ஒறுத்தார்க்கு ஒரு நாளை இன்பம் - (தமக்குத் தீமை செய்தவர்களைத்) தண்டித்தவர்க்கு, அவ் ஒரு நாளை இன்பமேயாம்; பொறுத்தார்க்குப் பொன்றும் துணையும் புகழ் - (அத்தீமை செய்தவரைப்) பொறுத்தவர்களுக்கு (உலகம்) அழியும் வரைக்கும் புகழ் உண்டாகும்.

தமக்குத் தீமை செய்தவர்களைப் பொறுத்தல் பெரும் புகழைத் தரும்.

## பொறாமையது குற்றம்

அழுக்கா(று) எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி யுய்த்து விடும். 14

பத: அழுக்காறு என ஒரு பாவி - பொறாமை என்று சொல்லப்பட்ட ஒப்பில்லாத பாவியானது, திருச் செற்றுத் தீயுழி உய்த்து விடும் - (தன்னை உடைய

வினைச்)செல்வத்தைக் கெடுத்து, துன்ப மிகுந்தவிடத்தில் செலுத்திவிடும்.

பொருமை உடையவன் மிக்க துன்பதை அடைவான்.

பொருமை - (பிறர் செல்வத்தைக் கண்டு மனதில்) புழுங்குதல்

## வெஃகாமையின் பயன்

அறனறிந்து வெஃகா வறிவுடையார்ச் சேரும்
திறனறிந்(து) ஆங்கே திரு. 15

பத: அறன் அறிந்து வெஃகா - (இது) அறம் என அறிந்து (பிறர் பொருளை) விரும்பாத, அறிவுடையார் - அறிவுடையாரை, திரு திறன் அறிந்து ஆங்கே சேரும் - செல்வம் தகுதியறிந்து அப்பொழுதே சென்றடையும்.

பிறர்பொருளை விரும்பாதவரிடம் செல்வம் தானே சேரும்.

வெஃகாமை - பிறர்க்குரிய பொருளை வெளவ எண்ணுதிருத்தல்.

## புறங்கூறுமை

பகச்சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் நகச்சொல்லி
நட்பாடல் தேற்ரு தவர். 16

பத: நகச் சொல்லி நட்பாடல் தேற்ருதவர் – (கூடி) மகிழுமாறு (இனிய சொற்களைச்) சொல்லி, நட்புச் செய்தலை (நன்மை என்று) அறியாதவர்; பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிப்பர் - (தம்மை) விட்டு நீங்குமாறு (புறம்) சொல்லித், தம் சுற்றத்தாரையும் பிரியப் பண்ணுவர்.

புறங்கூறுவார்க்கு யாவரும் பகையாவர்.

புறங்கூருமை - (காணுத விடத்து மற்றவரை) இகழ்ந்து உரையாமை.

## தீமை செய்யாமை

இலனென்று தீயவை செய்யற்க; செய்யின்
இலனுகும் மற்றும் பெயர்த்து. 17

பத: இலன் என்று தீயவை செய்யற்க - (ஒருவன், யான்) வறியவன் என்று நினைத்து அது நீங்குவதற்காகப் பிறருக்குத் தீய செய்கைகளைச் செய்யாது ஒழிக; செய்யின் பெயர்த்தும் இலன் ஆகும் - செய்தால் மீட்டும் வறியனு வான்.

வறுமை நீங்குவதற்காகத் தீயவை செய்பவர் நற்குண நற்செய்கைகளும் இல்லாதவர் ஆவர்.

## ஒப்புரவாளன் பொருளின் பயன்

**பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்**
**நயனுடை யான்கண் படின்.** 18

பத: செல்வம் நயனுடையான்கண் படின் - செல்வம் ஒப்புரவு செய்பவனிடத்து உண்டாகுமாயின், பயன் மரம் உள்ளூர்ப் பழுத்தற்று - (அது யாவர்க்கும்) பயன் படும் (ஒரு) மரம் ஊரின் நடுவில் பழுத்தாற் போலும்.

ஒப்புரவாளனின் செல்வம் யாவர்க்கும் பயன்படும்.

ஒப்புரவு - உலக வழக்கத்தினை அறிந்து செய்தல்.

## ஈயாமையது குற்றம்

**ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை**
**வைத்திழக்கும் வன்க ணவர்.** 19

பத: தாம் உடைமை வைத்து இழக்கும் வன் கணவர் - தாம் உடைய பொருளை (இரப்பவர்க்குக் கொடாது) வைத்து, (பின்) இழக்கின்ற அருளில்லா தவர், ஈத்து உவக்கும் இன்பம் அறியார் கொல் - (வறியவர்க்குக்) கொடுத்து, (அதனால் அவருக்கு உண்டாகும்) மகிழ்ச்சியைக் கண்டு தாம் அடையும் இன்பத்தைக் கண்டறியாரோ?

தம்மிடமுள்ள பொருளை வறியவர்க்குக் கொடுத்து அவர் மகிழ்வதைக் கண்டு தாமும் மகிழ்தல் சிறந்த தாகும்.

## புகழின் சிறப்பு

**ஈதல்; இசைபட வாழ்தல்; அது வல்ல(து)**
**ஊதியம் இல்லை உயிர்க்கு.** 20

பத: ஈதல் - (வறியவர்களுக்கு) ஈக; இசைபட வாழ்தல் - (அதனாற்) புகழ் உண்டாக வாழ்க; அது அல்லது உயிர்க்கு ஊதியம் இல்லை – அப்புகழல்லது மக்களுயிர்க்குப் பயன் தருவது வேறொன்றில்லை.

ஒருவன் புகழ்பெற வாழ வேண்டுமாயின் வறியவர்க்கு ஈதல் வேண்டும்.

ஈதல், வாழ்தல் - இங்கே வியங்கோள் வினைமுற்றுக்கள்.

## கூடா ஒழுக்கத்தின் குற்றம்

**வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம்**
**தானறி குற்றப் படின்.** 21

பத: தான் அறி குற்றம் – தான் குற்றம் என்றறிந்ததில், தன் நெஞ்சம் படின் - தனது நெஞ்சம் அழுந்துமானால், வான் உயர் தோற்றம் - (ஒருவனுக்கு) வான் போலும் உயர்ந்த பெருமை, எவன் செய்யும் - என்ன பயனைக் கொடுக்கும்?

அறிந்து செய்த குற்றம் நீக்கப் படாதாதலால், நெஞ்சு குற்ற முள்ளதாகவே ஆகிவிடும்; ஆகவே நின்ற தோற்றத்திற்குப் பக்கத்தாரை வெருட்டுதலே யல்லது வேறு பயனில்லை.

## கள்ளாமை

**உள்ளத்தால் உள்ளலும் தீதே; பிறன்பொருளைக்**
**கள்ளத்தால் கள்வே மெனல்.** 22

பத: உள்ளத்தால் உள்ளலும் தீதே - (பிறருக்கு உரிய பொருளைக் கவர்வதற்குத் தன்) நெஞ்சினால் நினைத்தலும் தீதாம்; பிறன் பொருளை - (ஆதலால்) பிறனொருவனது பொருளை, கள்ளத்தால் கள்வேம் எனல் - (அவன்) அறியாத விதம் வஞ்சித்துக் கொள்வோம் என்று எண்ணுதிருக்க வேண்டும்.

பிறர் பொருளை வஞ்சித்து அடைவோமென்று எண்ணுதலும் பெரும் தீமையாகும்.

எனல் - என்று எண்ணுதிருக்க வேண்டும்; எதிர் மறை வியங்கோள் வினைமுற்று.

## வாய்மையது தலைமை

**எல்லா விளக்கும் விளக்கல்ல; சான்றோர்க்குப்**
**பொய்யா விளக்கே விளக்கு.** 23

பத: எல்லா விளக்கும் - (ஞாயிறு, திங்கள், தீ முதலிய) எல்லா விளக்குகளும், விளக்கு அல்ல - விளக்கு ஆகமாட்டா; சன்றோர்க்கு - (அறிவு) நிறைந் தோர்க்கு, பொய்யா விளக்கு ஏ விளக்கு — (மனத் திருள் நீக்கும்) பொய் சொல்லாமையாகிய விளக்கே விளக்காகும்.

**உண்மை பேசுவதா லுண்டாகும் விளக்கமே ஆன்றோர்க்கு உயர்வானது.**

## வெகுளியது தீங்கு

**மறத்தல் வெகுளியை யார்மாட்டும்; தீய**
**பிறத்தல் அதனான் வரும்.** 24

பத: யார் மாட்டும் வெகுளியை மறத்தல் - யாவரிடத்தும் வெகுளியை ஒழிக்கக் கடவன்; தீய பிறத்தல் - (ஒருவர்க்குத்) தீயவை யெல்லாம் உண்டாதல், அதனால் வரும் - அதனாலே வரும். (ஆதலால்).

எல்லாத் தீமைகளுக்கும் பிறப்பிடம் வெகுளியே ஆதலால், அதனை யாரிடத்தும் செய்யாதிருத்தல் வேண்டும்.

## இன்னா செய்தார்க்கு வரும் தீங்கு

**பிறர்க்கின்னா முற்பகல் செய்யின் தமக்கின்னா**
**பிற்பகல் தாமே வரும்.** 25

பத: பிறர்க்கு இன்னா - மற்றவர்க்குத் துன்பம் தருபவைகளை, முன்பகல் செய்யின் - (ஒரு பகலின்)

முற்பகுதியில் செய்வாரானால், தமக்கு இன்னா - தமக்குத் துன்பம் தருபவை, பின்பகல் - (அதன்) பிற்பகுதியிலே, தாம் ஏ வரும் - (அவர் செய்யாமல்) தாமே வரும்.

முற்பகல் செய்யின் பிற்பகல் விளையும்; தீவினை செய்வோர் அதன் பயனை மிக விரைவில் அடைவர் என்பது.

## ஆள்பவர் இயல்பு

**அஞ்சாமை ஈகை அறிவூக்கம் இந்நான்கும்**
**எஞ்சாமை வேந்தர்க் (கு) இயல்பு.** 26

பத: வேந்தர்க்கு இயல்பு - ஆள்பவற்கு இயல்பாவது, அஞ்சாமை - கலங்காமையும், ஈகை - கொடையும், அறிவு - அறிவும், ஊக்கம் - ஊக்கமும், (ஆகிய) இந்நான்கும் எஞ்சாமை - இந்த நான்கும் குறையாதிருத்தல்.

ஆள்பவருக்கு அஞ்சாமை முதலியவை எப்பொழுதும் தோன்றி நிற்றல் வேண்டும்.

ஊக்கம் - (வினைசெய்யும் பொழுது தோன்றும்) மன எழுச்சி.

## கற்றார் உயர்வும் கல்லாதார் இழிவும்

**கண்ணுடையர் என்பவர் கற்றோர்: முகத்திரண்டு**
**புண்ணுடையர் கல்லா தவர்.** 27

பத: கண்ணுடையர் என்பவர் கற்றோர் - கண் உடையவரென்று (உயர்வாகச்) சொல்லப் படுவார் கற்றவரே; கல்லாதவர் முகத்து இரண்டு புண் உடையர் - கல்லாதவர் முகத்தில் இரண்டு புண்களை உடையவர்.

கற்றவர் நன்மை தீமைகளைப் பார்த்து அறிவார்; கல்லாதவர் அவற்றைப் பார்த்து அறியமாட்டாதவராவர்.

## கல்வியது சிறப்பு

**தொட்டனைத்து ஊறும் மணற்கேணி; மாந்தர்க்குக்**
**கற்றனைத்து ஊறும் அறிவு.** 28

பத: மணற்கேணி தொட்ட அனைத்து ஊறும் - மணல் கிணறு தோண்டிய அளவு நீர் சுரக்கும்; மாந்தர்க்கு அறிவு கற்ற அனைத்து ஊறும் - (அது போல) மாந்தர்க்குக் கற்ற அளவு அறிவு பெருகும்.

சிறிது கற்றவளவு போது மென்று நிறுத்தாது மேலும் மேலும் கற்றல் வேண்டும்.

## கல்லார் கற்றார்முன் பேசும் தகுதி யில்லாதவர்

**அரங்கின்றி வட்டாடி யற்றே; நிரம்பிய**
**நூலின்றிக் கோட்டி கொளல்.** 29

பத: நிரம்பிய நூல் இன்றிக் கோட்டிகொளல் - நிரம்பிய நூல்களைக் (கற்றல்) இல்லாமல் (பலர் கூடிய) அவையில் ஒன்றைச் சொல்லுதல், அரங்கு இன்றி வட்டு ஆடி அற்று - (சூதாடும்) இடமில்லாது சூதாடும் உண்டையை உருட்டினால் போன்றது;

கல்லாதவர், சபையில் ஒன்று சொல்லுதற்கு முன் வருவதால் சிறப்பில்லை.

## கேட்டலின் நன்மை

**எனைத்தானும் நல்லவை கேட்க; அனைத்தானும்**
**ஆன்ற பெருமை தரும்.** 30

பத: எனைத்தானும் நல்லவை கேட்க - எவ்வளவு சிறிதாயினும் நல்ல (பொருள்களைக்) கேட்கவேண்டும். அனைத்தானும் ஆன்ற பெருமை தரும் - (அக்கேள்வி) சிறிதாயிருந்தாலும் நிறைந்த பெருமையைக் கொடுக்கும்.

சிறிதளவு நல்ல நூற்பொருளை ஒருவன் கேட்டாலும் அது அவனுக்கு நிறைந்த பெருமையை உண்டாக்கும்.

## அறிவுடைமை

**அறிவுடையார் ஆவது அறிவார்; அறிவிலார்**
**அஃதறி கல்லா தவர்.** 31

பத: அறிவுடையார் ஆவது அறிவார் – அறிவுடையவர் மேல் வரும் நிகழ்ச்சியை (முன்னதாக) அறிய வல்லவர்; அறிவிலார் - அறிவு இல்லாதவர், அஃது -

அதனை, அறிகல்லாதவர் - (முன்) அறியமாட்டாத வராவர்.

அறிவுடையோர் வரப்போவதை அறிந்து கொள்வர்; அல்லாதவர் அதை அறிய மாட்டார்.

அறிவுடைமை - கல்வி கேள்விகளினுல் ஆகிய அறிவோடு உண்மை யறிவுடையனுகுதல்.

## குற்றம் கடிதல்

தன்குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காண்கிற்பின்
என்குற்ற மாகும் இறைக்கு. 32

பத: தன் குற்றம் நீக்கி - (முன்னர்) தனது குற்றத்தைக் கண்டு களைந்து, பிறர் குற்றம் காண்கிற்பின் - (பின்னர்) பிறருடைய குற்றத்தைக் காணவல்லவனுனல், இறைக்கு ஆகும் குற்றம் என் - தலைவனுக்கு வரக்கூடிய குற்றம் யாது?

தன் குற்றங்களைக் களைந்திருப்பவனே மக்களை நடத்துவதற்கு உரியவன்.

## பெரியாரைத் துணைக்கொள்ளலின் சிறப்பு

தம்மில் பெரியார் தமரா ஒழுகுதல்
வன்மையு ளெல்லாம் தலை. 33

பத: தம்மில் பெரியார் தமர் ஆ (க) ஒழுகுதல் - தம்மைக் காட்டிலும் (அறிவு முதலியவற்ருல்) பெரியவர்களைத் தமக்குச் சிறந்தவர்களாகக் (கொண்டு அவர்களது நெறியில்) நடத்தல், வன்மையுள் எல்லாம் தலை - எல்லா வலிமைகளினும் முதன்மையாகும்.

தெய்வத்தால் வரும் துன்பம் முதலியவற்றையும் நீக்குபவர் பெரியார் ஆதலால் அவர் துணை பெற்றவர் மிக்க வலிமை உடையவராவர்.

## சிற்றினம் சேராமை

மனத்தானும் மாந்தர்க் (கு) உணர்ச்சி; இனத்தானும்
இன்னுன் எனப்படும் சொல். 34

பத: மாந்தர்க்கு உணர்ச்சி மனத்தான் ஆம் - மக்களுக்கு (பொது) அறிவு மனம் காரணமாக உண்டாகும்; இன்னான் எனப்படும் சொல் இனத்தான் ஆம் - இவன் இப்படிப்பட்டவன் என்று (உலகத்தாரால்) சொல்லப்படும் சொல், சேர்ந்த இடத்தால் உண்டாகும்.

நல்லவரோடு சேர்ந்தால் நல்லவன் என்றும், தீயவரோடு சேர்ந்தால் தீயவனென்றும், ஒருவனை உலகத்தார் கூறுவர்; ஆகவே நல்லார் இணக்கமே கொள்ள வேண்டுவது.

## வலியறியாத விடத்துப் படும் குற்றம்



**பீலிபெய் சாகாடும் அச்சிறும்; அப்பண்டம்**
**சால மிகுத்துப் பெயின்.** 35

பத: பீலி பெய் சாகாடும் - (மிகவும் நொய்தாகிய) மயில் இறகை ஏற்றிய வண்டியும், — அச்சு இறும் - அச்சு முறியும்; அப்பண்டம் - அம்மயிலிறகை, சால மிகுத்துப் பெயின் - அது தாங்குமளவு அன்றி மிகுத்து ஏற்றினால்.

ஒருவன் தான் வலிமை உடையவன் ஆனாலும் பல எளியவரோடு பகை கொண்டால், அவர் ஒன்று கூடின விடத்துத் தன் வலி அழிந்து ஒழிவான்.

## வினை செய்யும் காலம் அறிதல்

**கொக்கொக்க கூம்பும் பருவத்து; மற்றதன்**
**குத்தொக்க சீர்த்த விடத்து** 36

பத: கூம்பும் பருவத்து -(தொழில்மேல் செல்லாது) அடங்கி யிருக்கும் காலத்தில், - கொக்கு ஒக்க - கொக்கு இருப்பதைப் போல இருக்க வேண்டும்; மற்றுச் சீர்த்த இடத்து - மற்றைச் செல்லும் காலம் கிடைத்த பொழுது, அதன் குத்து ஒக்க - அது குத்தி முடிக்குமாறு போலத் தப்பாமல் செய்து முடிக்க வேண்டும்.

ஒரு தொழிலைச் செய்பவன் அதற்கு ஆகும் காலம் வரையில் பொறுத்திருந்து, காலம் வாய்த்த பொழுது விரைந்து செய்து முடிக்க வேண்டும்.

## வினை செய்யும் இடம் அறிதல்

**நெடும்புனலுள் வெல்லும் முதலை; அடும்புனலின்**
**நீங்கின் அதனைப் பிற.** 37

பத: முதலை நெடும் புனலுள் (பிற) வெல்லும் - முதலை ஆழமான நீரினிடத்திலே மற்ற உயிர்களை வெல்லும்; புனலின் நீங்கின் - அந்நீரிலிருந்து நீங்குமானல், அதனை - அம் முதலையை, பிற அடும் - மற்ற உயிர்களெல்லாம் வெல்லும்.

எல்லாரும் தாமிருக்கு மிடத்தில் வலிமை பெற்றிருப்பர்; ஆகவே பகைவர் நிற்க முடியாத இடம் அறிந்து அவரை வெல்லுதல் வேண்டும்.

## குணம் குற்றங்களை அறிதற்குக் கருவி

**பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம்**
**கருமமே கட்டளைக் கல்.** 38

பத: பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் - (பிறப்பு, குணம், அறிவு என்பவைகளால் மக்கள் அடையும்) பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும், தம் தம் கருமமே - தாம் தாம் செய்யும் செயல்களே, கட்டளைக்கல் - உரை கல்லாகும் (வேறு இல்லை).

நல்லவரை அவர் செய்யும் நற்செயலாலும் தீயவரை அவர் செய்யும் தீச்செயலாலும் அறியலாம்.

உரைகல் - பொன்னின் மாற்றினை அறிவிக்கும் கல்.

## சுற்றம் தழுவும் வழி

**பெருங்கொடையான் பேணன் வெகுளி அவனின்**
**மருங்குடையார் மாநிலத்தில்.** 39

பத: பெருங்கொடையான் வெகுளி பேணன் - (ஒருவன்) மிகுந்த கொடையை உடையவனுமாய், வெகுளியை விரும்பாதவனுமானல், அவனின் - அவன் போல, மருங்கு உடையார் - சுற்றம் உடையவர், மா நிலத்து இல் - இப்பெரிய நிலத்தில் இல்லை.

மிக்க ஈகையோடு சினமும் இல்லாதவனைப் பலரும் சூழ்ந்து போற்றுவார்.

## பொச்சாவாமையது சிறப்பு

**அரியவென்(று) ஆகாத இல்லைபொச் சாவாக்**
**கருவியாற் போற்றிச் செயின்.** 40

பத: பொச்சாவாக் கருவியான் - மறவாத மனத்தி னாலே, போற்றிச் செயின் - எண்ணிச் செய்யப் பெற்றால், அரிய என்று ஆகாத இல்லை - (இவை செய்வதற்கு) அரியவை என்று சொல்லப்பட்டு (ஒரு வனுக்கு) முடியாத செயல்கள் இல்லை.

இடைவிடாத நினைப்பும் தவறாத சூழ்ச்சியும் உடையவர்களுக்கு எல்லாம் எளிதில் முடியும்.

## செங்கோலன் எய்தும் பயன்

**வேலன்று வென்றி தருவது; மன்னவன்**
**கோலதூஉம் கோடாது எனின்.** 41

பத: மன்னவன் வென்றி தருவது - அரசனுக்கு வெற்றியைக் கொடுப்பது, வேல் அன்று கோல் - (அவனது) வேல் அன்று, செங்கோலாகும்; அதூஉம் கோடாது எனின் - அச்செங்கோலும் கோணாது இருக்கு மாயின்.

அரசன் செங்கோல், நெறிதவறாது நீதி செய்யு மானால் அதுவே அவனுக்கு வெற்றியைக் கொடுக்கும்.

## கொடுங் கோன்மை

**துளியின்மை ஞாலத்திற்(கு) எற்றுஅற்றே வேந்தன்**
**அளியின்மை வாழும் உயிர்க்கு.** 42

பத: துளி இன்மை ஞாலத்திற்கு எற்று? - மழை பெய்யாதிருத்தல் (உலகில்) வாழும் உயிர்களுக்கு எவ்வளவு துன்பம் கொடுக்குமோ? அற்றே வேந்தன் அளி இன்மை வாழும் உயிர்க்கு - அவ்வகைத் துன்பம் கொடுக்கும், அரசன் (உலகில்) வாழும் உயிர்களிடம் அருளில்லாது இருத்தல்.

ஆள்பவன் குடிகளிடம் அருளுள்ளவனாய் இருத்தல் வேண்டும்.

## ஊக்கத்தினது சிறப்பு

**உள்ளம் உடைமை உடைமை; பொருளுடைமை**
**நில்லாது நீங்கி விடும். 43**

பத: **உள்ளம் உடைமை உடைமை** - (ஒருவனுக்கு) ஊக்கமுடைமையே (நிலையான) **உடைமையாகும்; பொருள் உடைமை நில்லாது நீங்கி விடும்** - (மற்றைய) செல்வம் **உடைமை** (நிலையாக) நிற்காது அழிந்து போகும்.

செய் தொழிலில் மனக்கிளர்ச்சி யுடையவனு யிருத்தலே சிறந்த செல்வமாகும்.

ஊக்கம் - (வினைசெய்யும் பொழுது மனதில் உண்டாகும்) கிளர்ச்சி.

## மடிமையது குற்றம்

**மடிமை குடிமைக்கண் தங்கின்தன் ஒன்னார்க்(கு)**
**அடிமை புகுத்தி விடும். 44**

பத: மடிமை குடிமைக்கண் தங்கின் - சோம்பலானது குடிமையுடையானிடம் தங்குமானால், தன் ஒன்னார்க்கு அடிமை புகுத்தி விடும் - (அச்சோம்பல் அவனைத்) தன் பகைவர்களுக்கு அடிமையாகச் செய்து விடும்.

குடிமையுடையவன் சோம்பலிற்கு இடம் கொடுத்தால் அது அவனைப் பகைவருக்குப் பணியும் படி செய்து விடும்.

மடிமை - (எண்ணிய வினைகள் செய்யும் பொழுது) சோம்பியிருத்தல்.

## முயற்சியது சிறப்பு

**அருமை உடைத்தென்று அசாவாமை வேண்டும்;**
**பெருமை முயற்சி தரும். 45**

பத: அருமை உடைத்து என்று - (நாம் செய்யும் தொழிலை முடித்தல்) அருமை யுடையதாகு மென்று எண்ணி, **அசாவாமை வேண்டும்** - தளராது இருத்தப்

வேண்டும்; பெருமை முயற்சி தரும் - (அதை முடித்தற்கு உரிய) பெருமையை முயற்சியானது (நமக்கு) உண்டாக்கும்.

தொழில் செய்யத் தொடங்குபவன் விடாது முயன்ருல் பெரியவன் ஆவான்; ஆகவே அருமையான தொழிலும் எளிதாக முடியும்.

## முயற்சி உடையாரது நன்மை

இன்பம் விழையான் வினைவிழைவான் தன்கேளிர்
துன்பம் துடைத்தூன்றும் தூண். 46

பத: இன்பம் விழையான் - (தனக்கு) இன்பத்தை விரும்பாதவனுய், வினை விழைவான் - (தான் செய்யும்) வினை முடித்தலேயே விரும்புவோன், தன் கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண் - தன்னுடைய சுற்றத்தார் நண்பர் முதலியோரது துன்பங்களை நீக்கி (அவர்களைத்) தாங்கும் தூணுவான்.

முயற்சியுடையவன் நண்பரையும் உறவினரையும் பாதுகாப்பான்.

## அமைச்சரது குணம்

வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ(டு)
ஐந்துடன் மாண்டது அமைச்சு. 47

பத: வன்கண் - (வினை செய்யும் பொழுது) அசைவின்மையும், குடி காத்தல் - குடிகளைக் காத்தலும், கற்று அறிதல் - (அறநூல்களைக்) கற்று அறிதலும், ஆள்வினை - முயற்சியும், ஐந்துடன் மாண்டது அமைச்சு- (முன் கூறிய) அவ்வைந்துடன், திருந்த உடையவனே அமைச்சனுவான்.

அசைவின்மை முதலிய குணங்கள் முழுவதும் பொருந்தியவரே அமைச்சராவதற்குத் தகுதியுடையராவர்.

'ஐந்துடன்' என்றது 631-ஆம் குறளிற் கூறப்பட்ட கருவி, காலம், செய்கை, செய்யும் அருவினை என்பவை.

## வினைத் தூய்மை

பழிமலைந்(து) எய்திய ஆக்கத்தின் சான்றோர்
கழிநல்குரவே தலை. 48

பத: பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் - (தீயவினை செய்வதால்) பழியைத் தம் மேற் கொண்டு பெற்ற செல்வத்தைக் காட்டிலும், சான்றோர் கழி நல்குரவே தலை - அறிவுடையோரது மிகுந்த வறுமையே உயர்ந்தது.

தீவினை செய்து அடைந்த செல்வத்தைவிட பெரியோரிடமிருக்கும் வறுமை சிறந்தது.

## மனவலிமை உடையாரெய்தும் பயன்

எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின். 49

பத: எண்ணிய எண்ணியாங்கு எய்துப - (தாம்) எண்ணிய பொருள்களெல்லாவற்றையும் எண்ணிய படியே அடைவர், எண்ணியார் - எண்ணியவர், திண்ணியர் ஆகப் பெறின் - அவற்றிற்கு வழியாகிய (தொழிலின் கண்) மனத் திண்மை உடையவராகப் பெற்றால்.

மன உறுதி உடையவர் எடுத்துக்கொண்ட தொழிலை முடிப்பர்; அதனால் அடைய நினைத்த பொருளெல்லாம் அடைவர்.

## தொழில் செய்யும் திறம்

சூழ்ச்சி முடிவு துணிவெய்தல் அத்துணிவு
தாழ்ச்சியுள் தங்குதல் தீது. 50

பத: சூழ்ச்சி முடிவு - ஆராய்ச்சிக்கு முடிவாவது, துணிவு எய்தல் - (ஆராய்கின்றவன் இனி இது தவறாது என்னும்) துணிவினைப் பெறுதல், அத் துணிவு - அங்ஙனம் துணியப் பெற்ற தொழில், தாழ்ச்சி உள் தங்குதல் தீது - (பின்) நீட்டிப்பில் தங்குமானால் குற்ற முடையதாகும்.

நன்கு எண்ணித் துணிந்த தொழிலைக் காலத் தாழ்வு இன்றி விரைந்து செய்ய வேண்டும்.

## குறிப்புஅறிதற்கு ஆகும் கருவி

**அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்**
**கடுத்தது காட்டும் முகம்.** 51

பத: அடுத்தது காட்டும் பளிங்கு போல் - (தன்னை) அடுத்த பொருளினது நிறத்தைத் தானே கொண்டு காட்டும் கண்ணாடி போல, நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும் - (ஒருவனது) நெஞ்சத்தில் மிக்கதனை (அவனுடைய) முகம் (தானே கொண்டு) காட்டி விடும்.

**ஒருவன் மனத்திலுள்ளதை அவன் முகம் எடுத்துக் காட்டுவதால் உணரலாம்.**

## நல்ல நாடு

**தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்**
**செல்வரும் சேர்வது நாடு.** 52

பத: தள்ளா விளையுளும் - குறையாத விளைவுகளைச் செய்வோரும், தக்காரும் - அறநெறி நடப்போரும், - தாழ்வு இலாச் செல்வரும் - கேடில்லாத செல்வம் உடையாரும், சேர்வது நாடு - ஒன்று கூடி வாழ்வதே நாடாகும்.

**விளை பொருள்கள், சான்றோர், நல்ல செல்வர் - இவர்கள் ஒன்று பட்டு வாழ்வதே நல்ல நாடு.**

**விளையுள் -விளைச்சல். இங்கே உழவரைக் குறித்தது.**

## அறிவுடையார் நட்பும் அறிவில்லார் நட்பும்

**நிறைநீர நீரவர் கேண்மை; பிறைமதிப்**
**பின்னீர பேதையார் நட்பு.** 53

பத: நீரவர் கேண்மை - அறிவுடையார் நட்புக்கள், பிறை நிறை நீர - இளம் திங்கள் போன்று (நாள் தோறும்) வளரும் தன்மையுடையன; பேதையார் நட்பு மதிப் பின் நீர - அறிவில்லாரது நட்புக்கள் நிறைந்த மதியானது பின் குறையும் தன்மைபோல் (நாள் தோறும்) குறையும் தன்மை உடையனவாம்.

**அறிவுடையார் நட்பு வளர்ச்சியுற்றுப் பயன் தரும்; அறிவில்லார் நட்பு குறைந்து போகும்.**

## கொள்ளத்தக்க நட்பும் தள்ள வேண்டிய நட்பும்

**மருவுக மாசற்றார் கேண்மைஒன்(று) ஈத்தும்**
**ஒருவுக ஒப்பிலார் நட்பு.** 54

பத: மாசு அற்றார் கேண்மை மருவுக - (உலகத்தோடு ஒத்துக்) குற்ற மற்றவரது நட்பையே செய்து கொள்ளல் வேண்டும்; ஒப்பு இலார் நட்பு - உலகத்தோடு ஒத்தல் இல்லாதவரது நட்பினை, ஒன்று ஈத்தும் ஒருவுக - அவர் விரும்பியது ஒரு பொருளைக் கொடுத்தாயினும் நீக்குதல் வேண்டும்.

நல்லோர் நட்பு இருமை இன்பமும் கொடுப்பதால் கொள்ள வேண்டும்; தீயோர் நட்பு துன்பத்தையே தருவதால் அதனைத் தள்ளவேண்டும்.

## குடிப்பிறந்தாரது உறுதி

**அடுக்கிய கோடி பெறினும் குடிப்பிறந்தார்**
**குன்றுவ செய்தல் இலர்.** 55

பத: அடுக்கிய கோடி பெறினும் - பலவாக அடுக்கப்பெற்ற கோடி அளவான பொருளைப் பெற்றாலும், குடிப்பிறந்தார் - உயர்ந்த குடியில் பிறந்தவர், குன்றுவ செய்தல் இலர் - (தமது ஒழுக்கம்) குறையும் தொழில்களைச் செய்ய மாட்டார்.

நல்ல குடியில் பிறந்தவர் பெரும்பொருளைப் பெறுவதானாலும் குற்றமான தொழில்களைச் செய்யமாட்டார்.

## மானத்திற்காகச் சாவதின் சிறப்பு

**மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னார்**
**உயிர்நீப்பர் மானம் வரின்.** 56

பத: உயிர் நீப்பின் - தனது மயிர்க் கூட்டத்தில் ஒரு மயிர் நீங்கினும், வாழா - உயிர் வாழாத, கவரிமா அன்னார் - கவரி மானைப் போன்றவர், மானம் வரின் - (தமக்கு) மானம் கிடைப்பதானால், உயிர் நீப்பர் - உயிரையும் விடுவர்.

சான்றோர் மானத்தை நிலை நிறுத்த உயிரையும் விடப் பின் வாங்கார்.

## செல்வம் பெற்றதால் மாத்திரம் பெருமை யடைதல் ஆகாது

**மேலிருந்தும் மேலல்லார் மேலல்லர்; கீழிருந்தும்
கீழல்லார் கீழல் லவர், 57**

பத: மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர் - சிறியோர் மேலான இடத்தில் இருந்தாலும் பெரியோராகார்; கீழ் அல்லவர் கீழ் இருந்தும் கீழல்லார் - பெரியோர் கீழான இடத்தில் இருந்தாலும், சிறியவராகார்.

கீழோர் செல்வம் பெற்றிருந்தாலும் மேலோராகார்; மேலோர் வறுமையுற்றிருந்தாலும் கீழோராகார்.

மேல் இருத்தல் - உயர்ந்த படுக்கை முதலியவற்றிலிருத்தல்.

கீழ் இருத்தல் - வறு நிலத்தில் இருந்தல்.

### சால்பிற்கு ஏற்ற குணங்கள்

**அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ(டு)
ஐந்துசால்(பு) ஊன்றிய தூண். 58**

பத: அன்பு - அன்பும், நாண் - நாணமும், ஒப்புரவு - ஒப்புரவும், கண்ணோட்டம் - கண்ணோட்டமும், வாய்மையோடு - வாய்மையும், ஐந்து - (என்ற) ஐந்தும், சால்பு ஊன்றிய தூண் - சால்பு என்னும் சுமையைத் தாங்கும் தூண்.

சால்புடைமைக்கு அன்பு முதலிய ஐந்து குணங்களும் இன்றியமையாதவை.

அன்பு - சுற்றத்தார் மேலேயன்றிப் பிறர்மேலும் உளதாகிய அன்பு.

நாண் - பழிபாவங்கட்கு வெட்கமடைதல்.

ஒப்புரவு - உலக நடையை அறிந்து செய்தல்.

கண்ணோட்டம் - தன்னோடு பழகியவரைக் கண்டால் அவர் கூறியன மறுக்க மாட்டாமை.

வாய்மை - தீங்கு இல்லாத சொற்களைச் சொல்லுதல்.

## குடியை உயர்த்துபவன் அடையும் பயன்

குற்றம் இலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்றும் உலகு. 59

பத: குற்றம் இலன் ஆய் - குற்றம் அற்றவனாய், - குடிசெய்துவாழ்வானை - (தன்) குடியை (உயரச்) செய்து வாழ்வானை, உலகு சுற்றம் ஆ(க)ச் சுற்றும் - உலகத்தார் (தங்களுக்குச்) சுற்றமாக (விரும்பித் தாமே போய்ச்) சுற்றி நிற்பர்.

தன் குடியை உயர்த்துபவனுக்கு உலகத்தாரெல்லாம் சுற்றமாவர்.

## உழு தொழிலைச் செய்வரது சிறப்பு

இரவார் இரப்பார்க்கொன்(று) ஈவர்; கரவாது
கைசெய்தூண் மாலையவர். 60

பத: கைசெய்து ஊண் மாலையவர் இரவார் - (தமது) கையால் உழுது உண்ணுதலை இயல்பாக உடையவர் பிறரிடத்துத் தாம் இரவார்; இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர் - (தம்மிடம்) இரப்பவருக்கு, அவர் வேண்டியது ஒரு பொருளை மறைக்காது கொடுப்பர்.

உழுதொழிலாளர் மற்றவரிடம் இரக்க மாட்டார்; தம்மிடம் இரப்பவருக்கு வேண்டியதைக் கொடுப்பர்.

இரப்பார் X இரவார்

இரப்பார் – "ஈக" என்று கேட்பவர்,

இரவார் – "ஈக" என்று கேளாதவர்.




The M. L. J. (BH) PRESS, TIRUBUVANAM.—C. 3000

RGR/33

# திருக்குறள்.

| | | | |
|---|---|---|---|
| முதற் பாரம் | 0 | 3 | 6 |
| இரண்டாம் பாரம் | 0 | 4 | 0 |
| மூன்றாம் பாரம் | 0 | 4 | 0 |
| நான்காம் பாரம் | 0 | 6 | 0 |
| ஐந்தாம் பாரம் | 0 | 6 | 0 |



*Cover page printed by Sri Nataraja Press, Kmu. 19-8 · 3000.*